# பகவத் பாதை

**BAGAVATH PATHAI**

• Volume : 1 • Issue : 16 தமிழ் மாத இதழ் • June 2015 • Annual Subscription Rs. 100/-

• மலர்:1 • இதழ்:16 • ஜுன் 2015 • வருடச் சந்தா ரூ.100/-


## பகிர்வது எவ்வாறு?



**நாம் அடைந்த தெளிவை நமக்கு தெரிந்த வார்த்தைகளில் மற்றவர்களும் பகிர்ந்து கொண்டால் போதும். நமது புரிதல் கூட இன்னும் நுண்மையாகி விடும். பல பரிமாணங்களிலும் அது எவ்வாறு செயல்படுகிறது என்பது புரிந்து விடும்.**

**- ஸ்ரீ பகவத்**



நாம் புரிய வேண்டியதை முழுமையாகப் புரிந்து கொண்டுள்ளோமா?

-இப்படி ஒரு கேள்வியை நம்மை நோக்கி நமக்கு நாமே கேட்டுக் கொண்டால் அதற்கு நாம் என்ன பதில் கொடுப்போம்?

பல் மருத்துவர் ஒருவர் தனது நண்பர் கூறியதாக இப்படிக் கூறினார்:

"நான் புரிந்து கொண்டேனா, புரிந்து கொள்ளவில்லையா என்று எனக்குத் தெரியவில்லை. என்ன புரிந்து கொண்டேன் என்றும் எனக்குத் தெரியவில்லை. ஆனால் என் மனதுக்குள் போராட்டங்கள் இல்லை. மனதில் ஏற்படும் தேவையற்ற உணர்வுகள் யாவும் தாமாக மறைந்து செல்வதை மட்டும் என்னால் பார்க்க முடிகிறது."

– இது அவருடைய நண்பரின் கூற்று.

நாம் அனைவரும் கேள்விப்பட்ட ஒரு கதை:

ஒரு விவசாயி ஆடுகள் சிலவற்றை வளர்த்து வந்தான். அதில் ஒரு ஆட்டுக்கு காலில் அடிபட்டு அதனால் நடக்க முடிய வில்லை. அதனால் அவன் அந்த ஆட்டை சந்தையில் விற்று விடலாம் என முடிவு செய்து அதனைத் தனது தோளில் சுமந்து கொண்டு புறப்பட்டான். அதனைக் கவனித்த மூன்று திருடர்கள் அந்த ஆட்டை அவனிடமிருந்து அபகரிக்கத் திட்டமிட்டார்கள்.

அந்த விவசாயி செல்லும் பாதையில் முதலாவது திருடன் உட்கார்ந்து கொண்டான். ஆட்டைச் சுமந்து செல்லும் விவசாயியை வினோதமாகப் பார்த்தான். பிறகு, "நரியை யாராவது இப்படி சுமந்து செல்வார்களா?" என்று ஆச்சரியமாகக் கேட்டான்.

விவசாயிக்கு கோபம் வந்து விட்டது "என்ன உனக்கு கண் தெரியவில்லையா? ஆட்டுக்கும் நரிக்கும் உனக்கு வித்தியாசம் தெரியாதா?" என்று கேட்டு விட்டு

விவசாயி தனது பாதையில் தொடர்ந்து போனான்.

இப்போது இரண்டாவது திருடன் எதிர்பட்டான். அவனும் அந்த விவசாயியை வினோதமாகப் பார்த்து விட்டு கேட்டான். "இந்த ஊரில் கழுதையை இப்படித்தான் சுமந்து செல்வார்களா?"

இப்போது விவசாயிக்கு கொஞ்சம் சந்தேகம் வர ஆரம்பித்தது. தான் சுமந்து செல்லும் ஆட்டை ஒரு முறை எட்டிப் பார்த்து உறுதி செய்து கொண்டான்.

அவன் மேலும் சற்று தூரம் சென்றதும் மூன்றாவது திருடன் எதிர்பட்டான். அவன் விவசாயியைப் பார்த்து பயந்து நடுங்கியவாரே கேட்டான்,

"இது பழகிய கரடியா?"

"என்ன இருந்தாலும் ஒரு கரடியை இப்படி சங்கிலி இல்லாமல் கொண்டு வரக் கூடாது."

இப்போது விவசாயி குழம்பிப் போய் விட்டான்.

"இப்படி ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வடிவத்தில் காட்சி கொடுக்கும் இது ஆடாக இருக்க முடியாது. இது ஏதாவது பேய் பிசாசகத்தான் இருக்கும்." – என்று எண்ணியவாறு அந்தக் குடியானவன் ஆட்டைப் போட்டு விட்டு வீட்டுக்கே ஓடிப் போய்விட்டான்.

திருடர்களும் ஆட்டை அபகரித்துக் கொண்டார்கள்.

இப்படித்தான் நமது கருத்தை பெண்மணி ஒருவர் புரிந்து கொண்டார்.

அவர் தமது உணர்ச்சிகளெல்லாம் பிரவாகமாக ஓடி மறைவதை அடையாளம் கண்டு கொண்டார்.

அவர் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை தன்னுடைய முந்தைய ஆன்மிக இயக்க அன்பர்களுடன் பகிர்ந்து கொண்டார். அதிலுள்ள உறுப்பினர் ஒருவர் அவரிடம் கூறியிருக்கிறார்; “ஞானம் அடைவது விடுதலை அடைவதெல்லாம் பெரிய விசயம் கிடையாது. அவேக்கனிங் (Awakening) அடைய வேண்டும். அதுதான் உயர்ந்த நிலை,” என்று கூறியிருக்கிறார்.

அதைக் கேட்டதும் அந்த பெண்மணி குழம்பி விட்டார். அதுபற்றி நம்மிடம் விளக்கம் கேட்டார்.

“உங்களுக்கு தகவல் கொடுத்தவருக்கு ஞானம் என்றால் என்ன, விடுதலை என்றால் என்ன என்பதே தெரியாமல் இருக்கிறது. அதனால் தான் அவர் இவ்வாறு கூறியிருக்கிறார். நீங்கள் அடைந்த விடுதலையை – பிரவாக நிலையைதான் அவர் அவேக்கனிங் (Awakening) என்ற இன்னுமொரு பெயரில் குறிப்பிடுகிறார். அது என்னவென்றே அவர் புரிந்திருக்காத காரணத்தால் தான் இவ்வாறு தவறான தகவலைக் கொடுத்துள்ளார்.”

– இப்படி அவருக்கு அது பற்றி விளக்கம் கொடுத்ததும் அந்த பெண்மணி திருப்தியடைந்தார்.

நம் சரியாகப் புரிந்து கொண்டோமா புரியவில்லையா என்று நமக்கு நாமே சந்தேகப்படும் சூழ்நிலையில் சில பெரிய மனிதர்கள் நம்மைச் சுலபமாகக் குழம்பி விடுகிறார்கள்.

இப்போது நான் உங்களிடம் பின்வரும் கேள்விகள் சிலவற்றைக் கேட்கப் போகிறேன்.

ஆன்மா என்றால் என்ன? உயிர் என்றால் என்ன? இரண்டும் ஒன்றா அல்லது வேறு வேறா?

இரமணமகிரிஷியின் ஞானத்துக்கும், இராமகிருஷ்ண பரமஹம்சரின் ஞானத்துக்கும் என்ன வேறுபாடு?

நம்முடைய மரணத்தை முன்கூட்டியே அறிய முடியுமா?

ஒளி உடம்பு என்றால் என்ன?

– இவற்றுக்கெல்லாம் உங்களுக்கு பதில் தெரியுமா?

இவற்றுக்கெல்லாம் பதில் அளிக்கத் தெரிந்தால் தான் நீங்கள் புரிய வேண்டியதைப் புரிந்து கொண்டீர்கள் என்று கூற முடியுமா?

எனது வீட்டுக்கு எதிரே ஒருவர் கார்களை ரிப்பேர் செய்யும் ஒர்க் ஷாப் ஒன்றை வைத்துள்ளார். நமது காரிலுள்ள எந்தக் பிரச்சினையையும் சுலபமாக சரி செய்துவிடுவார். பல வருடங்களாக அவர் இந்தத் தொழிலில் இருக்கிறார். இதில் தெரிந்து கொள்ள வேண்டிய முக்கியமான செய்தி என்னவென்றால், அவருக்கு கார் ஓட்டத் தெரியாது.

ஞானமும் விடுதலையையும் அடைவது என்பது கார் ஓட்ட தெரிந்து கொள்வதைப் போன்றதே, காரை ஓட்டுவதற்கு காரிலுள்ள மெக்கானிசம் அனைத்தும் தெரிந்திருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை.

மழைக்குள் நடக்க நேர்ந்தால் குடையை விரித்து பிடிக்கத் தெரிந்தால் போதும். குடையின் செயல்பாடு பற்றிய விஞ்ஞான நுணுக்கங்கள், மழையைப் பற்றிய விஞ்ஞான அம்சங்கள் ஆகியற்றை பற்றித் தெரிந்திருக்க வேண்டிய கட்டாயம் எதுவும் இல்லை.

“நாம் ஈடுபடும் அனைத்துச் செயல்களுக்கும் நாம் நம்முடைய மனதைப் பயன்படுத்தலாம். ஆனால் மனதை சீரமைக்க மட்டும் மனதை பயன்படுத்தக் கூடாது.”

– இந்த நடைமுறை உண்மையை மட்டும் தெரிந்து கொண்டால் போதும்.

இந்த ஒளிமயமான செய்தியை விளக்கத்தான் எத்தனையோ விதமான சாஸ்திரங்களும், அதற்கான விளக்கங்களும் தோன்றி விட்டன.

–எத்தனையோ விதமான தத்துவங்களும் தோன்றிவிட்டன.

தத்துவங்களும், சாஸ்திரங்களும் முக்கியமானவைகளல்ல. அவை அனைத்தும் சுட்டிக்காட்டும் மையமான உண்மை தான் முக்கியத்துவம் மிகுந்தது.

நமது கருத்துகளோடு தொடர்பு கொண்ட பலரும் – அனைவரும் இந்த மையமான உண்மையினைப் புரிந்து கொண்டு விட்டார்கள். இதனால் தங்களது மன உளைச்சல்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டு விட்டார்கள். ஆனாலும் அவர்கள் எவரோ எழுப்பி வைத்துள்ள தத்துவக் கோட்டையின் மீது தேவையில்லாமல் சில வேளைகளில் இடித்துக் கொள்கிறார்கள்.

இதனால் அவர்களுக்கு “இதற்கு மேலும் நாம் எதையோ தெரிந்து கொள்ள வேண்டியது இருக்கிறது என்ற மயக்கமும் ஏற்பட்டு விடுகின்றது.”

ஆனால் நாம் தெரிந்து கொண்டது; நீங்கள் புரிந்து கொண்டது

– சத்தியமான உண்மையாகும்.

அது நமக்குள் செயல்பட்டு நல்லவிதமான விளைவுகளை ஏற்படுத்துவதும் சத்தியமான உண்மையாகும்.

நாம் தெரிந்த உண்மையினை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வது கூட

நாம் தெரிந்து கொண்ட உண்மையை உறுதிப்படுத்துவதேயாகும்.

நமது கருத்துகளைப் புரிந்து கொண்ட அன்பர் ஒருவர் வங்கி அதிகாரியாக இருக்கிறார்.

காலையிலிருந்து மாலை வரை அவர் எத்தனையோ விதமான கணக்குகளைக் கவனிக்க வேண்டிய பொறுப்பில் இருக்கிறார். மாலை வரையிலும் அவரது நடவடிக்கைகள் தடங்கலில்லாமல் நீரோட்டம் போல் இருக்கும்.

மாலையில் அவர் எல்லா கணக்குகளையும் ஒருங்கிணைத்து நேர் செய்ய வேண்டும். சில கணக்குகள் ஒத்துழைக்காது. இதனால் அவர் டென்சன் ஆகிவிடுவார். தலை வெடித்து விடுமோ எனத் தோன்றும். அவரது நிலையைக் கண்டு அடுத்தவர்களும் பதட்டம் அடைய நேர்ந்து விடும்.

நமது கருத்துகள் அவருக்கு அறிமுகம் ஆகிய நிலையில் அவர் தனது உணர்ச்சிகளை எல்லாம் பிரவாகத்தில் விட்டு விட்டார்.

அதன் பிறகு மற்றவர்களெல்லாம் ஆச்சரியமடைய ஆரம்பித்தார்கள். ஏனெனில் இப்போது அவர் தனது கணக்குகளை பதட்டமில்லாமல் அணுகுகினார்.

"உங்களுக்கு இந்த மாற்றம் எப்படி நேர்ந்தது?" என அவரைக் கேட்க ஆரம்பித்தார்கள்.

அவர் நமது கருத்துகளை மற்றவர்களுக்கும் எடுத்துக் கூறினார். ஆனால் எவரும் அதனைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. அதனால் அவர் அடுத்தவர்களைப் புரிய வைக்கும் முயற்சியை கைவிட்டு விட்டார்.

தான் தெரிந்து கொண்டதை ஏன் அவரால் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியவில்லை?

அவர் தெரிய வேண்டியதைத் தெரிந்து கொண்டிருக்கிறார் அல்லது இன்னும் அவர் தெரிந்து கொள்ள ஏதாவது இருக்கிறதா?

உலகம் முழுவதும் இருளாக இருக்கிறது. என்று வைத்துக் கொள்வோம். உலகத்து இருள் அனைத்தையும் போக்கினால் தான் நாம் வெளிச்சத்துக்கு வரமுடியுமா?

நமது வீட்டுக்கு நாம் செயல்படும் இடத்துக்கு வெளிச்சத்தைக் கொண்டு வந்தால் போதும், அதுவே நமக்குப் போதும், நாம் பெற்ற தெளிவு நமக்குப் போதும். அதை அடுத்தவர்களுக்குக் கொண்டு சேர்ப்பது மட்டுந்தான் சற்று சிரமமான பணி.

அந்தப் பணியை எளிமையாக்க முடியுமா?

நாம் அடைந்த தெளிவு பொய்யானதல்ல. அது உண்மையானது.

ஆகவே அதை நமக்குத் தெரிந்த வார்த்தைகளில் மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டால் போதும்.

நாம் நமது அன்றாட வாழ்க்கையில் எத்தனையோ விதமான பிரச்சினைகளைச் சந்திக்கிறோம். இப்படித் தான் நம்மோடு தொடர்பு கொண்ட பலரும் பிரச்சினைகளில் உழன்று கொண்டிருக்கின்றனர்.

அவர்கள் அந்தப் பிரச்சினைகளை எவ்வாறு எதிர்கொள்வது என்பதை எளிமையான வார்த்தைகளில் கற்றுக் கொடுத்தால் போதுமானது. இதற்கு ஞானம் – விடுதலை என்று தத்துவ ரீதியான வார்த்தைகள் கூடத் தேவையில்லை.

நாம் அடுத்தவர்களுக்குத் தேவையான செய்திகளையும், அணுகுமுறையையும் கொடுக்கும்போது

நமது புரிதல் கூட இன்னும் நுண்மையாகிவிடும். பல பரிமாணங்களிலும் அது எவ்வாறு செயல்படுகிறது என்பது புரிந்து விடும்.

நமது கருத்துகளையும், அணுகுமுறையையும் புரிந்து கொண்ட வெளிநாட்டவர் இருவர் தங்களை மாஸ்டர்களாக அறிவித்துக் கொண்டு உலகம் முழுவதும் பல இடங்களில் வகுப்புகளும், சத்சம்பாசனைகளும் மேற்கொண்டு வருகிறார்கள்.

நமது மொழியில் உள்ளவர்களும் தயக்கத்தை விட்டு விட்டு தனித்தனி மாஸ்டர்களாகி புதுப்புது அனுபவங்களைச் சந்திக்க வேண்டுவது தான் சரியானது.

நாம் களத்தில் இறங்கும் போது தான், ஒவ்வொரு கேள்வியையும், ஒவ்வொரு நிகழ்வினையும் எப்படி அணுகுவது என்ற அனுபவ ரீதியான தெளிவு நமக்குக் கிடைக்கும்.





ஏப்ரல் 30, மே 1,2,3 ஆகிய தேதிகளில் நடைபெற்ற **ஏற்காடு சிறப்பு ஞானமுகாமில்** கலந்து கொண்டவர்களுடன் **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்.

## ?கேள்வி பதில்¿

**கேள்வி :** எதை புரிந்து கொண்டால் மற்ற எல்லாவற்றையும் புரிந்து கொண்டதாகுமோ அதுவே இந்த ஞானப்புரிதல் என்று பகவத் ஐயாவின் நூல்களில் கூறப்பட்டு இருக்கிறது. மேலும் புரிதலினால் நமக்கு நாமே சுய ஒளியாக செயல்படுவோம் என்றும் கூறப்படுகிறது. புரிதலுக்கு பிறகு நமக்கு குருவின் உதவியோ, வழிகாட்டுதலோ, மற்ற யாருடைய உதவியும் தேவை படாதா? அது எப்படி சாத்தியம் என்பதை விளக்கமாக கூறவும்?

**பதில் :** இந்த கேள்விக்கு பகவத் ஐயா ஒரு பெண்மணிக்கு சொன்ன பதிலே விடையாக இருக்கும் என நினைக்கிறேன். இனி அந்த பெண்மணியுடன் ஐயாவின் உரையாடல்.....

பல ஆண்டுகளாக பல்வேறு ஆன்மிக முயற்சிகளை மேற்கொண்டு கடைசியாக பகவத் ஐயாவின் நூல்கள் அனைத்தையும் படித்து விட்டு அந்த பெண்மணி "நான் உங்களை தான் குரு நாதராக ஏற்றுக் கொண்டேன். எப்போதும் உங்களையே தான் நினைத்துக் கொண்டு இருக்கிறேன். நீங்கள் தான் எனக்கு கடவுளாக தெரிகிறீர்கள்" என்று பகவத் ஐயாவிடம் கூறிக் கொண்டு இருந்தார்.

சரி என்று கேட்டுக் கொண்டு, "நீங்களாக அப்படி நினைக்க வேண்டாம். உங்களுக்கு அப்படி நினைவு வந்தால் வந்து விட்டு போகட்டும். நீங்களாக மட்டும் அப்படி நினைத்துக் கொண்டு இருக்க வேண்டாம்" என்று பகவத் ஐயா கூறினார்.

அந்த பெண்மணி தனது தோழி கூறியதாக ஐயாவிடம் ஒரு சந்தேகம் கேட்கிறார். "அதாவது குருநாதர் என்ன சொல்கிறாரோ அவர்கள் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டு தான் நடக்க வேண்டும். நீயாக வேறு ஒன்றும் செய்ய கூடாது என்று கூறியிருக்கிறார். அப்படித்தான் நான் நடந்து கொள்ள வேண்டுமா?" என்று கேட்டு இருக்கிறார்.

ஐயா அதற்கு, "அது அந்த காலப் பாரம்பரியம் அப்படி. இப்பவெல்லாம் அப்படி கிடையாது." என்று கூறி ஓர் எளிய உதாரணத்தையும் கூறினார்.

நமக்கு அறிமுகம் இல்லாத இருண்ட வீட்டில் Switch Box இருக்கும் இடத்தை காட்டித் தருவதற்கு நமக்கு ஒருவர் தேவை. அவர் தான் குரு. இருளாக இருக்கும் அந்த வீட்டில் உள்ளே முதலில் இடது பக்கம் சென்று பிறகு வலது பக்கத்தின் கடைசியாக சென்று கையை உயர்த்தினால் Switch Box நமது கைக்கு தென்படும். Switch Box தென்பட்டவுடன் அதிலிருக்கும் Switch On செய்யுங்கள் பிறகு அந்த இருண்ட வீட்டிற்கு வெளிச்சம் வந்து விடும். வெளிச்சம் வந்த பிறகு வீட்டில் எது எப்படி எங்கே இருக்கிறது என்பது உங்களுக்கே தெரியும். வெளிச்சமான அந்த வீட்டில் எது எது எங்கே இருக்கிறது என்பதை யாரும் உங்களுக்கு சொல்லித் தர தேவையில்லை. குரு என்பவர் இருண்ட வீட்டில் Switch Box இருக்கும் இடத்தைக் காட்டிக் கொடுத்து Switch On செய்யவும் காட்டிக் கொடுக்கிறார். பிறகு வீட்டிற்கு வெளிச்சம் ஏற்படுகிறது. வெளிச்சம் ஏற்பட்ட பிறகு உங்களுக்கே எல்லாம் தெரிந்து விடுகிறது. அந்த அளவிற்கு குருவின் தேவை உள்ளது. "உங்களுக்கு Switch On செய்ய தெரிந்த பிறகு வெளிச்சம் பெறபட்ட பிறகும் குரு என்பவர் தேவையில்லை" என்று பகவத் ஐயா கூறினார்.

இந்த உதாரணத்தின் மூலம் நாம் என்ன தெரிந்து கொள்கிறோம் என்றால் பகவத் ஐயா அவர்கள் 50 ஆண்டு காலம் கடும் பாடுபட்டு பல இடங்களில் முட்டி மோதி அடிப்பட்டு பிறகு இருண்ட வீட்டில் எங்கு Switch On செய்து வெளிச்சத்தை கண்டு நடைமுறை வாழ்வில் அதன் பயனை முழுவதுமாக உணர்ந்திருக்கிறார். தான் உணர்ந்த பிறகு நம்மை போன்று பலரும் இருண்ட வீட்டில் Switch Box எங்கு உள்ளது என்பது தெரியாமல் தடுமாறுகிறார்கள் என்பது உணர்ந்து எப்படி Switch On செய்வது என்பதை மற்றவர்களுக்கு அவர்களின் மனநிலைக்கு இறங்கி வந்து தெரியப்படுத்துவது தான் ஐயாவின் சிறப்பு. அப்படி அவர் Switch On செய்வது தான் அவரது நூல்கள், சொற்பொழிவுகள், ஞான முகாம்கள், பகவத் பாதை கட்டுரைகள் என அனைத்தும்.

நம் இருண்ட வீட்டில் Switch On செய்ய தெரிந்து கொண்டால் போதும். பிறகு நமக்கே வெளிச்சம் ஏற்பட்டுவிடும். நம் வீட்டில் எங்கே கதவு இருக்கிறது. ஜன்னல் இருக்கிறது. வீட்டின் மேல் தளத்திற்கு செல்வதற்கு எங்கு படிகட்டு அமைந்துள்ளது என்ற அனைத்தும் வீட்டில் எங்கு எங்கு உள்ளது என நமக்கே தெரிந்துவிடும். நமக்கு தெரிந்த பிறகு நாம் அந்த வெளிச்சத்தை நம்முடைய நடைமுறை வாழ்க்கை வசதிக்காக எப்படி பயன்படுத்திக் கொள்ள வேண்டுமோ அப்படி பயன்படுத்திக் கொள்ளலாம்.

புரிதலை தான் ஐயா Switch On செய்வது என்று கூறுகிறார். எப்போது நாம் புரிந்து கொள்கிறோமோ அதன் பிறகு வெளிச்சம் என்ற புரிதல் ஏற்படுகிறது. புரிதலினால் நமக்கே எது சரி எது தவறு என்பது நன்றாக நமக்கே தெரிகிறது.

நமக்கே நன்றாக தெரிவதை தான் சுய ஒளி என்று கூறுகிறார்கள். நமக்கு நம்முடைய புரிதலே சுயஒளியாக செயல்பட்டு நம்முடைய நடைமுறை வாழ்வில் காலை கண் விழித்தது முதல் இரவு கண் அயர்ந்து தூங்கும் வரை நாம் எதிர்கொள்ளும் அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் அதற்கு நாம் எப்படி நடந்துக் கொள்ள வேண்டும் என்பதை நமது புரிதலே நமக்கு ஒளியாக வழிகாட்டுகிறது. இப்படி நாம் சந்திக்கும் நடைமுறை நிகழ்ச்சிகளில் நாம் செய்யும் செயல் பலவற்றை சரியாகவும், நிறைவாகும் செய்கிறோம். சிலவற்றில் தவறும் செய்து விடுகிறோம். நாம் சந்திக்கும் தவறுகளே அடுத்து அந்த சூழ்நிலையை எப்படி எதிர்கொள்வது என்பதற்கு நமக்கு பாடமாக அமைகிறது.

புரிதலினால் நாம் நம்முடைய பழைய நிலைகளிலிருந்து கொஞ்சம், கொஞ்சமாக நம்முடைய சரியான செயலின் மூலம் மேம்பட்டு உயர்ந்த நிலைக்கு உயர்கிறோம். புரிதலினால் நமக்குள் ஏற்படும் தேவையற்ற மனபோராட்டம் முடிவுக்கு வருகிறது. நமக்குள் தேவையற்ற மனப்போராட்டம் குறையக் குறைய நாமாக செய்யும் தேவையற்ற செயல்கள் குறைய குறைய நாமாக செய்யும் செயல்களில் ஒரு ஒழுங்கும் நேர்த்தியும் தானாகவே மாற்றம் ஏற்படுகிறது. காலப்போக்கில் நமது பெரும்பாலான செயல்கள், ஒழுங்காகவும், நேர்த்தியாகவும் அமைகின்றன. இப்படி மாற்றம் ஏற்படுவதினால் நமக்கு தெரியாமலே நமது இயல்பே மாற்றமடைந்து விடுகிறது.

புரிந்த பிறகு நமக்கு தெரிந்தும், தெரியாமலும் சில தவறுகள் நடந்தாலும் கூட காலப்போக்கில் அந்த தவறுகளிலிருந்து வந்த தீவிரமும் குறைந்து நாம் ஓர் நிறைவான தன்மைக்கு வந்து விடுவோம். இந்தப் புரிதலினால் நமது மனதில் பழைய மனப்பதிவுகளின் அழுத்தம் மேலும் அதிகரிக்காமலும் ஏற்கனவே இருந்து வந்த மனப்பதிவின் அழுத்தமும் குறைந்துக் குறைந்து அதன் சுவடுகள் நம்மை விட்டு நீங்க தொடங்குகின்றன. மேற்கொண்டு மனப்பதிவுகள் அழுத்தம் பெறாமல், பழைய மனப்பதிவுகளும் நம்மை விட்டு கழன்று சென்று கொண்டு இருக்கும். மொத்தத்தில் நாம் நம்முடைய பழைய தேவையற்ற போராட்டத்திலிருந்து விடுபட்டு நிறைவாக வாழும் தகுதியை இந்த புரிதலின் மூலம் பெறுகிறோம்.

புரிதல் ஒன்றே நம்முடைய எல்லாப் பிரச்சனைகளுக்கும் ஒட்டு மொத்த தீர்வாக அமைகிறது. அந்த புரிதலே நமக்கு சுயஒளியாக செயல்படுகிறது. புரிதல் நமக்கு மட்டும் நன்றாக வேலை செய்யும். ஆனால் நாம் மற்றவர்களுக்கு செயல் வழியாக மட்டுமே உதவி செய்ய முடியும். திறந்த மனதுடன் ஏற்றுக்கொள்ள ஆர்வமாக உள்ள யாருக்கும் இந்த புரிதல் நன்றாக வேலை செய்யும். இந்த புரிதலில் ஆர்வமுள்ள மற்றவர்களுக்கும் நாம் எடுத்துச் சொல்லும் தகுதியையும் பெறுகிறோம். புரிந்த நாம் விளக்கி மற்ற பல விளக்குகளை ஏற்றும் வாய்ப்பை பெறுகிறோம்.

‘‘புரிதல் ஒன்றே நம்முடைய எல்லா பிரச்சனைகளுக்கும் முழுமையான தீர்வாக உள்ளது.”

**V.A.P. சரவணன்** சேலம்
செல்: 9994205880





ஜெர்மனியில் முன்ஸ்ரர் நகரத்தில் 16-05-2015ல் சனிக்கிழமை அன்று திரு. **நவராஜா** அவர்களின் முயற்சியால் நடைபெற்ற **பகவத் பாதை சத்சங்கத்தில்** கலந்து கொண்டவர்கள்



திரு. **நவராஜா** அவர்கள் குடும்பத்துடன் இந்திய வந்திருந்து
**பகவத் ஐயா** அவர்களை சந்தித்த போது

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

நாம் அனைவரும் நமது வாழ்க்கை பயணத்தை தனித் தனியாக கடந்து கொண்டிருந்தாலும் நம் அனைவரின் பயணத்திற்கும் நமக்குள் ஒளியாக இருந்து வழி நடத்துவது பகவத் ஐயா கொடுத்த ஞானப்புரிதல் தான். அதை பகிர்ந்து கொள்வதற்கும், தேடுதல் உள்ளவர்களை தேடிக் கொடுப்பதற்கும் ஊடகமாக இருப்பது நமது பகவத் பாதை.

மேலும் நாம் நம் அனைவருடனும் ஓர் இனிய நட்புறவை ஏற்படுத்திக் கொள்ளவும் நமது பகவத் பாதை பேருதவியாக இருக்கிறது. நான் உங்கள் உருவங்களை சந்திக்காவிட்டாலும் என் உணர்வுகளால் உங்களை சந்திப்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறேன். மேலும் ஒரு மகிழச்சியான செய்தி, நமது பகவத் பாதை மாத இதழானது ஓர் ஆன்மிக செய்தித்தாளாக RNI, Delhi-ல் பதிவு செய்யப்பட்டு மேலும் தற்போது தபால் துறையிலும் பதிவு செய்யப்பட்டுவிட்டது. இனி ஒவ்வொரு மாதமும் 10ந் தேதிக்குள் பகவத் பாதை மாத இதழ் தபாலில் அனுப்பப் பட்டுவிடும். இந்த மாதம் மட்டும் மே மற்றும் ஜூன் மாதத்தை இணைத்து ஜூன் மாதமாகவே வெளியிடப்பட்டுள்ளது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் நமது பகவத் மிஷன் மூலம் ஞான முகாம்கள் பல நடத்திக் கொண்டிருப்பதும் அதனால் தெளிவு பெறுபவர்கள் எண்ணிக்கை அதிகரிப்பதும் நாம் நன்கு அறிந்ததே, அவ்வாறு தெளிவு பெற்றவர்கள் தங்களது மகிழ்ச்சியை நன்றியாக தெரிவிக்கும் போது நமது முயற்சிக்கான பலன் கிடைத்துக் கொண்டிருப்பதாக ஒரு மன நிறைவு ஏற்படுகிறது.

அந்த வகையில் 4 நாள் ஏற்காடு ஞானமுகாமில் கலந்து கொண்டவர்கள் அனைவரும் ஒரு சுற்றுலா வந்ததுபோல் ஒரு மகிழ்ச்சியான சூழ்நிலையில் இருந்து கொண்டே தங்களுக்குள் இருந்த ஐயங்களுக்கு விளக்கம் பெற்று தெளிவு பெற்று சென்றனர். பலர் குடும்பங்களோடும், குழந்தைகளோடும் வந்திருந்தனர். குழந்தைகளும் மகிழ்ச்சியாக விளையாடினார்கள். ஐயாவின் ஞான வகுப்புகளும் அருமையாக நடைபெற்றது. எவற்றாலும் எதுவும் பாதிக்காத வண்ணம் அனைத்தும் சிறப்பாக நடைபெற்றது. புதிதாக கலந்து கொண்ட அன்பரில் ஒருவர், "நான் எத்தனையோ ஆன்மிக முகாம்களில் கலந்து கொண்டிருக்கிறேன். அவைகளில் மிகவும் கட்டுப்பாடுகள் இருக்கும், வகுப்புகளை மிகவும் Serious ஆகவும் சொல்லிக் கொடுப்பார்கள். ஆனால் இங்கு தான் மிகவும் தளர்வாகவும் சுற்றுலா வந்தது போல் மகிழ்ச்சியாகவும் இருந்து கொண்டே மிக உயர்ந்த ஞானத்தையே பகவத் ஐயா சொல்லிக் கொடுக்கிறார்கள். இது மிகவும் ஆச்சரியமாகவும் வித்தியாசமாகவும் உள்ளது." என்று கூறி தனது மகிழ்ச்சியையும் நன்றியையும் தெரிவித்தார்.

மேலும் நமது ஐயாவின் கருத்துக்களில் தெளிவடைந்தவர்கள் அவரவர்கள் இருக்கும்மிடத்தில் ஆர்வமுள்ளவர்கள் ஒன்றிணைந்து கலந்துரையாடலில் ஈடுபடுவது புரிதலை பகிர்ந்து கொள்வதற்கும் உறுதிபடுத்திக் கொள்வதற்கும் வாய்ப்பாக அமையும்.

இந்த வகையில் சென்னையில் நமது பகவத் மிஷனின் மையமான அம்பத்தூரிலும் மற்றும் வெஸ்ட் மாம்பலத்திலும், பெரம்பூரிலும் அன்பர்கள் ஒன்று கூடி சத்சங்கத்தில் ஈடுபட்டு வருகிறார்கள். இது அனைவருக்கும் பயனுள்ள வகையில் அமைந்துள்ளது.

பகவத் ஐயாவின் நூல்களை படித்து அவரை நேரில் சந்தித்து உரையாடி ஞானத் தெளிவு பெற்று ஜெர்மனியில் வசித்து வரும் நமது நண்பர் திரு. நவராஜா அவர்கள், ஞானத்தேடுதல் உள்ள அன்பர்களை ஒன்றிணைத்து அவர் வசிக்கும் ஜெர்மனியிலேயே 16.05.2015 அன்று ஒரு சத்சங்கத்தை நடத்தி ஐயாவின் நூல்களை கொடுத்து கருத்துகளை பகிர்ந்து கொண்டார். இனி தொடர்ந்து மாதம் ஒருமுறை சத்சங்கம் நடைபெறும் என்பதையும் தெரிவித்திருக்கிறார். அவருக்கு பகவத் மிஷன் சார்பில் நமது பாராட்டுக்களையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்வோம்.

இது போல் ஆர்வம் உள்ள அனைவரும் அவரவர்கள் ஊரில் சத்சங்கம் ஏற்பாடு செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இதுவே நாம் சமுதாயத்திற்கு செய்யும் மிகப் பெரிய தொண்டு.

இது சம்பந்தமான வழிகாட்டுதலுக்கு எங்களோடு தொடர்பு கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

அன்புடன்
ஆசிரியர். **K.S. ஜீவமணி**
**செல் :** 97891-65555

## பொள்ளாச்சியில் 3 நாள்

# ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : 17-07-2015 மாலை 5-00 மணி முதல்
19-07-2015 மதியம் 3-00 மணி வரை

இடம் : **சிவகண்யா தோப்பு,** ஆலாங்கண்டி பஸ் ஸ்டாப்,
(அங்கலக்குறிச்சிக்கும், ஆழியார் அணைக்கும் இடையில்)
தாய் அன்பாலயம் அருகில், வால்பாறை ரோடு, பொள்ளாச்சி.

தலைப்புகள் : **ஞானத் தெளிவு**
**நான் யார்?**
**அக - புற வாழ்வு**
**ஞானத் தெளிவில் உறுதி.**

நன்கொடை ரூ.1000/- (தங்குமிடம் மற்றும் உணவுக்காக)
தங்குவதற்கு ஆண்களுக்கும், பெண்களுக்கும்
தனித்தனி இடவசதி உண்டு.
(படுக்கை வசதியுடன் வரவேண்டும்)

அனைவரும் வருக!
தெளிவு பெறுக!

முன்பதிவு அவசியம்.
முன்பதிவிற்கு: 97981 65555, 99942 05880
**Online Booking : www.pravaagam.org**
விபரங்களுக்கு : 98422 16465, 86086 99899

மேலும் விபரங்களுக்கு



## ஸ்ரீ பகவத் மிஷன்

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3. செல்: 9789165555, 9994205880
www.pravaagam.org, www.sribagavath.org -youtube: enlightenment/sri bagavath

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஓர் ஆண்டு சந்தா | - | ரூ. 100/- | ஐந்தாண்டு சந்தா | - | ரூ. 500/- |
| ஆயுள் சந்தா | - | ரூ, 1000/- | | | |

சந்தா தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

www.pravaagam.org என்ற இணைய தளத்தில் Credit Card / Debit Card மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank-ல் Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம்.

Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



## மகிழ்ச்சி எங்கே?

ஜென் கதை

ஓர் ஊரில் பெரிய கோடீஸ்வரன் இருந்தான். அவனிடம் இல்லாத விஷயங்களே இல்லை. அத்தனையும் அளவுக்கு அதிகமாக கொட்டிக் கிடந்தன. ஆனால் சந்தோஷமும் நிம்மதியும் தான் இல்லை.

சரி உள்ளூரில் தான் சந்தோஷம் கிடைக்கவில்லை, வெளியூர், விதவிதமான நாடுகளுக்குப் போனால் கிடைக்குமா என்று, தேடித் தேடிப் போனான். ஆனால் நிம்மதி கிடைத்தபாடில்ல. மனசுக்குள்ள எப்பவும் பரபரப்பு... எந்த ஊருக்குப் போனாலும் அடுத்த நாளே, வீட்டுல என்ன ஆச்சோங்கிற கவலை. தண்டவாளப் பெட்டி பத்திரமா இருக்குமாங்கிற பயம்... சொந்தக்காரங்களே அமுக்கிடுவாங்களோகிங்கிற சந்தேகம்!

சரி, இதை மறந்தாவது தொலைக்கலாம்னு மது, மாது, போதைப் பொருள்னு சகலத்திலும் இறங்கிட்டான். ஆனா அதிலும் நிம்மதி கிடைக்கல....

ச்சீ போதும் இந்த வாழ்க்கை என்று இருக்கும் போது துறவறத்தில் சந்நியாசியா போயிட்டால் அமைதி கிடைக்கும்னு யாரோ சொல்ல, அவனும் துறவறத்தில் இறங்கினான்.

உடனே அவன் தன் வீட்டில் இருந்த தங்கம், வைரம், வைடூரியம், எக்கச்சக்க பணம் எல்லாத்தையும் ஒரு மூட்டையா கட்டி எடுத்துக்கிட்டு ஒரு துறவியைப் பார்க்கப் போனான்.

அப்போது துறவி ஒருத்தர் மரத்தடியில் உட்கார்ந்துட்டிருந்தார். அதைப் பார்த்த அந்த கோடீஸ்வரன், அந்த மூட்டையை துறவியின் காலடில வச்சிட்டு, “குருவே! இதோ என்னோட மொத்த சொத்தும் இதுல இருக்கு. இனி இவை எதுவும் எனக்கு வேணாம். எனக்கு அதையும், சந்தோஷமும்தான் வேணும்... அடுத்து என்ன செய்யணும்...,” என்று கேட்டு கும்பிட்டான்.

எல்லாத்தையும் கேட்டுக்கிட்ட துறவி, உடனே அந்த மூட்டையை வேகமா பிரிச்சுப் பார்த்தார்.

அதில் தங்கமும் வைர வைடூரியங்களும் கட்டுக்கட்டா பணமும்... பார்த்த துறவி சடார்னு, அந்த மூட்டையை கட்டி தலையில் வைத்துக் கொண்டு ஒரே ஓட்டமா ஓட ஆரம்பிச்சார்.

அதைப் பாத்ததும் கோடீஸ்வரனுக்கு இன்னும் பேரதிர்ச்சி. அடடா.. இவன் பஞ்சத்துக்காக காவி கட்டிய போலி சாமியார் போலிருக்கேன்னு பதறிட்டான். கோபம் கோபமாக வந்தது. உடனே துறவியை துறத்த ஆரம்பிச்சிட்டான் அந்த செல்வந்தன்.

துறவியின் ஓட்டத்துக்கு செல்வந்தனால் ஈடு கொடுக்க முடியல. துறவி சந்து பொந்தெல்லாம் சர்வ சாதாரணமா ஓடறார். தாவிக் குதிக்கிறார்... ம்மஹூம்.. பணக்காரனால ஒண்ணுமே பண்ண முடியல. ஆனா துறவி எல்லா தெருக்களையும் ஓடி முடித்து கடைசியில் அதே மரத்தடிக்கு வந்து நின்னுட்டார்.

அந்த கோடீஸ்வரனைப் பாத்தார். “என்ன கண்ணா பயந்துட்டியா... இந்தா உன் சொத்து மூட்டை நீயே வச்சுக்க...” என்று திருப்பிக் கொடுத்தார்.

சொத்து மூட்டை கையில் வந்ததும் கோடீஸ்வரன் அடைஞ்ச சந்தோஷத்துக்கு அளவே இல்ல. ஒரே குதூகலமாயிட்டான். முகமெல்லாம் சிரிப்பு தாண்டவமாடுது.

இப்போது அந்த துறவி கேட்டார்...

“என்னப்பா... புதுசா சிரிக்கிற... இதுக்கு முன்னாடி இந்த செல்வமெல்லாம் எங்கே இருந்துச்சி.. உங்கிட்டதானே.. ஆனா அப்ப உன்கிட்ட மகிழ்ச்சி இல்ல.. இப்பவும் நீ வச்சிருக்கிறது அதே சொத்துதான். ஆனா சந்தோஷமும் நிம்மதியும் உன் முகத்தில் தெரியுது...!” என்று கூறிவிட்டு, சட்டென்று திரும்பிப் பார்க்காமல் நடந்தார்.

எல்லாம் புரிந்த தெளிவோடு வீடு திரும்பினான் செல்வந்தன்.

**“மகிழ்ச்சி என்பது புறப் பொருளில் இல்லை, நமது அகத்தில் உள்ளது.”**





# தூக்கத்திலும் விழிப்பு நிலை



நம்முடைய ஞானப்புரிதல் என்பது நம்முடைய ஆழ்ந்த ஆய்வின் வழியாக

- தீர்க்கமான சிந்தனையின் வழியாக ஏற்படக் கூடியது.

ஆகவே நாம், நாம் நமது ஞானத் தெளிவின் நிரந்தரத் தன்மை குறித்து சந்தேகப்படத் தேவையில்லை.

ஞானப்புரிதல் ஏற்பட்டால்

அது நிரந்தரமாக ஏற்பட்டதே தான்.

- ஸ்ரீ பகவத்



முக்தி நிலை தான் மனித வாழ்வின் உயர்ந்த நிலையாக போற்றப்படுகிறது.

ஆனால் முக்தி நிலை என்ற பெயரில் ஒவ்வொருவரும் ஏதோ ஒரு வினோதமான நிலையை கற்பிதம் செய்து கொள்கிறார்கள்.

ஏதோ ஒரு வினோதமான அனுபவத்தைக் கற்பிதம் செய்து கொள்கிறார்கள். உண்மையில் முக்தி என்பது ஓர் அனுபவம் அன்று.

எல்லா அனுபவங்களிலிருந்து விடுபட்ட ஒரு சுதந்திர நிலைதான் முக்தியாகும்.

–ஒரு விடுதலை நிலைதான் முக்தியாகும்.

மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த அன்பர் ஒருவர் நம்மைச் சந்திக்க தனது நண்பர்களுடன் வந்திருந்தார். அவர்கள் அனைவருமே ஆன்மிகத் தேடுதல் மிகுந்தவர்கள்.

எத்தனையோ விதமான பயிற்சி முயற்சிகளையும், அனுபவங்களையும் அவர்கள் கூறினார்கள். நமது அணுகுமுறை பற்றியும் அவர்கள் தெரிந்து வைத்திருக்கிறார்கள்.

அதனால் நமது அணுகுமுறையையும் கூட ஒரு வித முயற்சியாகவே அவர்கள் புரிந்து கொண்டார்கள்.

அவர்களுள் ஒருவர் அறுவை சிகிச்சை மருத்துவர். அவர் தனக்கு ஏற்பட்ட வினோதமான அனுபவம் பற்றியே விளக்கம் கேட்க ஆரம்பித்தார்.

தூங்கும் போதும் விழித்துக் கொண்டிருப்பது போன்ற அனுபவம் அவருக்கு ஏற்படுவதாகவும், அதை நமது சாஸ்திரங்கள் துரிய நிலை என விவரித்திருப்பதாகவும், இதைத்தான் அறி துயில் என ஆன்ம சாதகர்கள் சுட்டிக் காட்டுவதாகவும் கூறினார்கள்.

ஆன்மிக உலகில் பெரியவர்களாக மதிக்கபடுபவர்கள் சிலரும் தங்களுக்கு இத்தகைய அனுபவம் உள்ளதாகக் கூறியிருக்கிறார்கள்.

அப்படி ஒரு விசேடமான அனுபவம் ஏற்படுவது தான் முக்தி நிலையா?

நம்மோடு தொடர்பு கொண்ட பலர் தங்களுக்கு ஏற்படும் சூட்சும சரீர அனுபவங்கள் பற்றி நம்முடன் பகிர்ந்து கொண்டிருக்கிறார்கள்.

ஸ்தூலமாக இருக்கும் இந்த உடலினுள் சூட்சுமமான நம்முடைய மனோசூத்திரம் தங்கி இருக்கிறது. இரண்டும் பிரிவின்றி ஒன்றுடன் ஒன்று கலந்து விட்ட காரணத்தினால் மனது கூட உடலில் உள்ள மூளையின் இயக்கம் போன்று நம்மால் உணரப்பட்டு வருகிறது.

நமது ஸ்தூலமான உடலை விட்டு, சூட்சுமமான, மன உடல் மட்டும் சிறிது நேரம் வெளியேறி விட்டு மீண்டும் ஸ்தூல உடலோடு ஐக்கியமாகும் அனுபவம் சிலருக்கு ஏற்படுகிறது. அப்படி ஸ்தூல உடலை விட்டு மன உடல் வெளியே வந்திடும் போது உடலைப் பற்றிய எந்த உணர்வும் நமக்கு இருப்பதில்லை.

மன உடல் எங்கே இருக்கிறதோ அது தான் நாம் என்ற உணர்வு மட்டுந்தான் நமக்கு இருக்கும்.

நமது பொறிகள் – இந்திரியங்கள் அனைத்தும் நமது உடலில் இருந்தாலும். நம்முடைய புலன்கள் அனைத்தும் இந்த சூட்சும சரீரமான மன உடலிலேயே இருக்கின்றன.

அதனால் இந்த சூட்சும உடலுக்கு பார்க்கவும், கேட்கவும் முடியும். உடலுக்கு வெளியே வந்த நிலையில் நமது ஸ்தூல உடலைப் பார்க்க முடியும், மற்றவர்கள் பேசுவதை கேட்கவும் முடியும்.

ஸ்தூல உடலுக்குள் மேலிருந்து இயங்கி வரும் சூட்சும சரீரம் தனித்து இயங்கும் தன்மையைப் பெற்ற நிலையிலேயே அது ஸ்தூல உடலை விட்டு வெளியே வந்து விட்டு மீண்டும் உடலோடு இணைந்து கொள்கிறது.

நமக்குள்ளே இயங்கும் இந்த சூட்சும சரீரம், இப்படி தனித்து இயங்கக் கூடிய தகுதியை - இயக்கத்தை சிலருக்குப் பெற்று விடுகிறது.

இன்னுமொரு புதிய அன்பர் வந்து இன்னுமொரு புதிய கேள்வியை எழுப்பினார்.

“எனக்கு U.G. கிருஷ்ணமூர்த்தியின் கருத்துகள் மிகவும் பிடிக்கும். அவர் கூறுவது அனைத்தும் யதார்த்தமாகவும், உண்மையாகவும் இருக்கும். அதனால் அவருடைய கருத்துகளே என்னை மிகவும் வசீகரித்தன....

‘‘அவர் சற்று இளமையாகவும் ஆரோக்கியமாகவும் இருக்கும் போது அவரது கருத்துகள் யாவும் தெளிவாகவும், அறிவு பூர்வமாகவும் தர்க்க ரீதியாகவும், நியாயத் தன்மையுடனும், ஒழுங்குமுறையுடனும் இருக்கும், அவற்றில் எந்தப் பிசிரும், சருக்கல்களும் இருக்காது. அவருடைய வார்த்தைகள் சத்தியத்தைப் பிரதிபலிப்பதாகவே இருக்கும்....

“U.G. கிருஷ்ணமூர்த்தி தனது இறுதிக் காலத்தில், உடல் ஆரோக்கியத்தை இழந்து விட்டார். மிகவும் நலிவடைந்து விட்டார். அவருடைய கடைசி காலத்து வீடியோக்களையும் பார்த்திட நேர்ந்தது. அவர் உடல் நலம் பாதிக்கப்பட்டது அவருடைய அறிவையும் பாதித்து விட்டது போல் தோன்றியது. அவருடைய கருத்துகள் சீராகவும், நியாயத் தன்மையுடனும் அமையாமல் இருந்தன. அவரது வார்த்தைகளில் தேவையற்ற வன்முறை வெளிப்பட்டது. அவரது கருத்துகள் பல இடங்களில் தர்க்கரீதியாக அமையாமல் உளறலாக அமைந்திருந்தன. அவருக்கு ஏற்பட்ட உடற்பாதிப்பு, அவரது கருத்துகளையும், அறிவையும் பாதித்து விட்டது போல் தோன்றியது...

“இதனால் அறிவுப் பூர்வமான ஞானத்தின் மீதே எனக்கு, சந்தேகம் ஏற்பட்டது. நீங்களும் ஞானம் என்பது அறிவுப்பூர்வமானது, புத்தி பூர்வமானது என்று கூறுகிறீர்கள். நம் உடலின் பாதிப்பு அறிவைப் பாதித்து விடும் போது அது நம் ஞானத்தையும் பாதித்து விடதானே செய்யும்? இப்படி பாதிக்கபடக்கூடிய ஞானத்தை அடைவது எப்படி சிறப்பாக இருக்க முடியும்? இது எப்படி முடிந்த முடிவாக இருக்க முடியும்?”

-இப்படி அவர் தனது சந்தேகத்தையும், கருத்தையும் வெளிப்படுத்தினார்.

இங்கு நாம் இதனை எவ்வாறு புரிந்து கொள்வது?

அந்த அன்பரைப்போல், நமக்கு U.G.கிருஷ்ணமூர்த்தியின் கருத்துகளில் போதிய பரிச்சயம் கிடையாது.

ஒரு விவாதத்துக்காக

அந்த அன்பர் கூறியது உண்மை என்றே எடுத்துக் கொள்வோம்.

நாம் அடைந்த புரிதல், நாம் அடைந்த அறிவு பூர்வமான ஞானம்

நம்முடைய உடல்நலம் பாதிக்கப் பட்டால் பாதிக்கப்பட்டு விடுமா?

இது தான் நாம் புரிந்து கொள்ள வேண்டிய பிரச்சினை.

நாம் ஒரு விபத்தில் காயமடைந்த நிலையில், நம் மூளையின் செயல்பாட்டினாலும் பாதிப்பு ஏற்பட்டுவிட்டதாக வைத்துக் கொள்வோம்.

இப்போது அது நம் ஞானத்தைப் பாதிக்குமா?

நம் புரிதலை அது பாதிக்குமா?

நாம் ஏற்கனவே பார்த்தபடி நம்முடைய சூட்சும சரீரமான நமது மன உடல் நம்முடைய ஸ்தூல சரீரத்தால் கட்டுப்படுத்தப்பட்டே இருக்கிறது.

நாம் கனவற்று ஆழ்ந்து உறங்குவதாக வைத்துக் கொள்வோம். இந்நிலையில் நமக்கு எந்த எண்ணங்களும் இருக்காது.

நமது மூளையானது எண்ணங்களை வெளிப்படுத்தாத செயலற்ற நிலைக்கு சென்று விடும் போது

நம் அறிவும் செயலற்றுப் போய் விடுகிறது?

நாம் தூங்கும் போது நமது ஞானம் - நமது புரிந்து கொள்ளும் தன்மை என்ன ஆகின்றது?

அதுவும் நின்று போய் விடுகின்றது.

எண்ணங்களற்ற நிலையில் நமது ஞானமும், புரிதலும் மறைந்து விடுகின்றது.

எண்ணங்கள் மீண்டும் தோன்றும் போது ஞானமும், புரிதலும் மீண்டும் செயல்பட ஆரம்பிக்கின்றது.

நம் உடலின் தன்மைகேற்ப நமது எண்ணங்களும், எண்ணங்களின் தன்மைகேற்ப நமது புரிதலும் செயல்படுகிறது.

அதனால் தான் உடல் தூங்கும் போது எண்ணங்களும் மறைந்து விடுகின்றன.

நமது உடல், நோயினாலோ அல்லது முதுமையினாலோ நலிவுற்ற நிலையில் அது நமது எண்ணங்களின் தன்மையைப் பாதிப்பதும் சாத்தியமே.

அப்படியானால்!

நமது ஞானமும், புரிதலும் பாதிப்புக்கு உட்பட்டது தானா?

– தற்காலிகமானது தானா?

இப்போது நாம் மீண்டும் நமது முதலாவது நிகழ்வை எடுத்துக் கொள்வோம்.

தூங்கும் போதும் நாம் விழித்துக் கொண்டிருக்கும் நிலை என்பது என்ன?

சிலர் தங்கள் மன உடலை, ஸ்தூலமான உடலிருந்து பிரித்து வெளியே கொண்டு வந்து விடுவதாகப் பார்த்தோம்.

சூட்சுமமான அவர்களது மன உடல் ஏதோ ஒரு காரணத்தினால்,

ஸ்தூல உடலின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டு விடுகிறது.

–ஸ்தூல உடலின் கட்டுக்குள் அடங்காமல் ஏதோ ஒரு வகைகளில் தனித்து இயங்குகிறது.

தனித்து இயங்கும் நமது மன உடல் நமது உடலை விட்டு வெளியே வந்து விடுவதாக பார்த்தோம்.

அப்படி தனித்து இயங்கும் தகுதியை அடைத்த நமது மன உடல்

நமது ஸ்தூல உடலை விட்டு வெளியே வராவிட்டால் என்ன ஆகும்?

நமது மன உடலானது

தான் இருக்கும் தனது இருப்பை வெளிப்படுத்தும் தன்மைக்கு வந்து விடும்.

தூங்கும் போது விழித்திருப்பதாகத் தோன்றுவது இதுதான்.

துரிய நிலை, ஆன்ம விழிப்பு நிலை என சிலர் தவறாகப் பொருள் கொண்டு விடுகின்றனர்.

துரியம், ஆன்மா என்பதெல்லாம் நம்முடைய அடிப்படையான உணர்வு நிலைதான் என்றாலும்

அது தன்னுடைய இருப்பை அது இப்படி தனிப்பட்ட முறையில் வெளிப்படுத்திக் கொள்வதில்லை.

துரிய – ஆன்மா தான் நமது அடிப்படையான உணர்வாக இருந்து அனைத்து விதமான உணர்ச்சிகளாகவும் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது.

நமக்கு ஏற்படும் உடல் மற்றும் மன உணர்ச்சிகள் அனைத்தும் ஆன்ம உணர்வின் வெளிப்பாடுகளே.

நம் உடலின் பாதிப்பு

எந்த அளவில் நம்முடைய புரிதலை, ஞானத்தைப் பாதிக்கிறது.

நம்முடைய ஞானப்புரிதல் என்பது நம்முடைய ஆழ்ந்த ஆய்வின் வழியாக

– தீர்க்கமான சிந்தனையின் வழியாக ஏற்படக் கூடியது.

அதனால்

தீர்க்கமான – ஆழ்ந்த அறிவுப்பூர்வமான சிந்தனையின் உதவியில்லாமல்

நமது ஞானத் தெளிவையும் மாற்றிக் கொள்ள முடியாது.

நம் உடலின் பாதிப்பு

நாம் பரிமாறும் செய்திகளை தெளிவாக எடுத்துக் கூறும் திறமையை வேண்டுமானால் பாதிக்கலாம்.

அது எதுவும் நாம் அறிவுப் பூர்வமாக எடுத்துக் கொண்ட முடிவுகளைப் பாதிக்காது.

ஞானம் என்பது

நாம் நமக்குள்ளாக முரண்படாமல் இருப்பதே ஆகும்.

– சுய முரண்பாடு தேவை இல்லை என்ற முடிவுக்கு வருவதே ஆகும்.

அப்படி நமது மன உடலானது நமது பாதிப்படைந்த உடலினால் பாதிக்கப்பட்டாலுங் கூட

நமது சூட்சும உடல், ஸ்தூல உடலை விட்டு வெளியே வந்திடும் போது

உடலின் பாதிப்பை விட்டும் வெளியே வந்து விடுகிறது.

அதனால் நமது அறிவுப் பூர்வமான ஞானம்

நமது மரணத்துக்குப் பின்பும் தொடர்ந்து வருகிறது.

ஆகவே, நமது ஞானப் புரிதலைத் தடுக்கும் சக்தி

நம் உடலுக்குக் கிடையாது.

– நம் உடல் உபாதைகளுக்குக் கிடையாது.

“நாம் எதையுமே அடையத் தேவை இல்லை என்று கூறி வந்த U.G.கிருஷ்ணமூர்த்தி, தனது உடல் பாதிப்புக்குப் பின்னால் தனது முடிவை மாற்றிக் கொண்டு, நாம் அடைவதற்கு எதுவுவோ உள்ளது என்று மாற்றிக் கூற ஆரம்பித்தாரா?”

– என்று அந்த அன்பரைக் கேட்போம்.

“அப்படி எதுவும், அவர் கூறவில்லை” என்று அந்த அன்பரும் கூறிவிட்டார்.

ஆகவே நாம், நாம் நமது ஞானத் தெளிவின் நிரந்தரத் தன்மை குறித்து சந்தேகப்படத் தேவையில்லை.

**ஞானப்புரிதல் ஏற்பட்டால்**

**அது நிரந்தரமாக ஏற்பட்டதே தான்.**



## ? கேள்வி பதில் ¿

**கேள்வி :** நான் பகவத் ஐயாவின் புரிதலை ஓர் அளவிற்கு புரிந்து கொண்டிருக்கிறேன். என்னுடைய கடந்த கால வாழ்க்கையிலிருந்து இப்போது இந்த புரிதலால் நிறைய மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன, அதை நடைமுறை வாழ்க்கையில் உணர்கின்றேன். ஆனால் கணவன் மனைவி என்ற இந்த உறவில் மட்டும் இன்னும் கோபம் ஏற்படுகிறது. கோபத்தினால் குற்ற உணர்ச்சியும், வருத்தமும் ஏற்படுகிறது. அதிலிருந்து விடுபட்டு நிறைவாக வாழ்வது எப்படி?

**பதில்:** புரிந்து கொண்ட நமக்கு கோபமே வரக்கூடாது என்று நினைக்கத் தேவையில்லை. நமக்கு ஏற்பட்ட கோபம் நம் மனதின் கவனத்திற்கு தெரியாமல் ஏற்பட்டதா? அல்லது நம்முடைய மனதின் கவனத்திற்கு தெரிந்த பிறகு ஏற்பட்டதா? என்பது தான் நாம் சிந்திக்க வேண்டிய முக்கிய கேள்வி. நம்முடைய மனதின் கவனத்திற்கு வராமல் ஏற்பட்ட கோபத்திற்கு நாம் ஒன்றும் செய்துவிட முடியாது. அப்படி ஏற்பட்ட கோபத்திற்கு நாம் பொறுப்பு ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லை என்பதை புரிந்து கொள்வதுதான் புரிதலே. எந்த நிலையில் நமது மனிதன் கவனத்திற்கு தெரிகிறதோ, அதன் பிறகு தான் நாம் பதட்டத்திலிருந்து நிதானத்திற்கு வருகிறோம்.

நாம் நிதானத்திற்க்கு வந்த பிறகு தான் நாம் எதிர் கொண்ட கோபத்தை நம்முடைய புத்தி பூர்வமான சரியான அணுகுமுறையில் அணுகுவதற்கான சரியான செயலை செய்ய முடியும். அதற்கு முன்பாக நடந்த எதற்கும் நாம் எந்த வகையிலும் பொறுப்பு கிடையாது. நடந்து முடிந்தவை அனைத்தும் நம்மை மீறி நடந்தவை என நாம் முடித்துக் கொள்ள வேண்டும். நம்மை மீறி நடந்தவை என்று எடுத்துக் கொள்ளும் போது மட்டும் தான் கோபத்தை கடந்து நிதானத்துடன் செயல்பட முடியும்.

கணவன் மனைவியாக இணைந்து வாழும் பலருக்கும் இப்படி கோபம் ஏற்படுவது சாதாரணமான ஒன்று. கணவன், மனைவி என்று வரும் போது ஒருவரின் இயல்பு, விருப்பம், வெறுப்பு, பிடித்தது, பிடிக்காதாது, என பல விசயமும் மற்றொருவருக்கு தெரியும். கணவனுக்கு, மனைவி இப்படி, இப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற எதிர்பார்ப்பு ஏற்பட்டு விடுகிறது. நமக்கு பிடித்தது, விரும்பியது நடக்கும் போது மகிழ்ச்சியும், பிடிக்காதது நடக்கும் போது கோபமும், வெறுப்பும் ஏற்படுகிறது. இப்படி ஏற்படுவதற்கு நமது எதிர்பார்ப்பே காரணமாக இருக்கிறது.

பொதுவாக நம்முடைய நடைமுறை குடும்ப வாழ்வில் கணவன் மனைவி இடையே நடக்கும் ஒரு சம்பவத்தை பார்ப்போம். மனைவியின் ஏதோ ஒரு செயல் கணவனுக்கு கோபத்தை ஏற்படுத்தி விடுகிறது. கோபம் ஏற்பட்டதும் ஏதோ சில வேண்டாத வார்த்தைகளை பேசிவிடுகிறார். கணவன் மனைவிக்குள் விவாதம் நடந்து கொண்டே இருக்கிறது. விவாதத்தின் உச்சத்திற்கு சென்று இனிமேல் பேசி எந்த பிரியோஜனமும் இல்லை என்ற ஒட்டு மொத்த வெறுப்புணர்வு ஏற்படுகிறது. பிறகு கொஞ்ச நேரம் கடந்து தான் நமது மனதின் கவனத்திற்கு தெரிகிறது. நாம் கோபப்பட்டு அவ்வாறு நடந்து கொண்டது சரியல்ல என்பது நமக்கு தெரிகிறது.

நாம் நடந்து கொண்டது சரியல்ல என்பது தெரிந்தவுடன் நமக்கு குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. நாம் ஏன் இவ்வாறு நடந்து கொண்டோம். நாம் இவ்வாறு நடந்து கொண்டு இருக்க கூடாது. இது சரியல்ல, என்று நடந்து முடிந்த கோபத்தோடு போராடுகிறோம். நாம் இப்படி நடந்து கொண்டது நமக்கே பிடிக்க வில்லை. அதனால் நாம் வருத்தமும், வேதனையும் படுகிறோம்.

நாம் இப்படி நடந்து கொண்டதால் நமக்கு நம்மீது குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. நமக்கு ஏற்பட்ட குற்ற உணர்ச்சிக்கு நாம் நமது தரப்பு நியாயத்தை நிலை நாட்டவே போராடுகிறோம். நாம் நமது மனைவியிடம் "நான் ஏன் அப்படி நடந்து கொண்டேன் என்றால்..." என்று ஆரம்பித்து நமது தரப்பு நியாத்தை நியாப்படுத்தவே போராடுகிறோம். நாம் கோபப்பட்டு அப்படி நடந்து கொண்டது தவறு என்று நமது மனைவியிடம் நம்மால் ஒத்து போக முடியவில்லை. நீ சரியாக புரிந்துக் கொள்ளவில்லை என்று நமது தரப்பு நியாத்தையே நாம் நிரூபிக்க விரும்புகிறோம். இது தான் வழக்கமான ஒன்றாக உள்ளது.

மேற்கண்ட இந்த நிகழ்ச்சியில் உண்மையில் நடந்தது என்ன?

நமக்கு நமது மனைவியிடம் ஏதோ ஓர் நிகழ்ச்சியாக நம்மையும் மீறி ஓர் கோபம் ஏற்பட்டது. நமக்கு ஏற்பட்ட கோபத்தினால் நம்மையும் மீறி சில வேண்டாத வார்த்தைகளை பேசிவிடுகிறோம். பேசிக் கொண்டு இருக்கும் போதே, அல்லது முடிந்த பிறகோ தான் நமது மனதின் கவனத்திற்கு நாம் கோபப்பட்டு நமது கவனமின்றி பேசிவிட்டோம் என்பது தெரிகிறது. நாம் இவ்வாறு பேசியது நமக்கே சரியானதாகத் தோன்றவில்லை.

அதனால் குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. நமக்கு ஏற்பட்ட குற்ற உணர்ச்சிக்காக மனைவியிடம் நமது தரப்பு சமாதானத்தை பேசுகிறோம். இது தான் இங்கு நடக்கிறது.

நமக்கு கோபம் ஏற்பட்டது, கோபம் ஏற்பட்ட பிறகு தான் மனதின் கவனத்திற்கு தெரிகிறது. தெரிந்த பிறகு குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது. குற்ற உணர்ச்சி ஏற்பட்டதும் நமக்கு பிடிக்கவில்லை, இருந்தாலும் நடந்த செயலை நாம் நியாப்படுத்திக் கொள்ளவே நாம் போராடுகிறோம்.

நமது மனைவிக்கு நாம் கோபப்பட்டு பேசியது மட்டும் தான் தெரியும். அதன் பிறகு கோபம் நமது மனதின் கவனத்திற்கு தெரிவதும் அவருக்கு தெரியாது. நமக்கு ஏற்பட்ட குற்ற உணர்ச்சியும் அவருக்கு தெரியாது. நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிக்காக நாம் அவர்களுக்கு செய்யும் சமாதனத்தையும் அவர்கள் எதிர்பார்க்கவில்லை.

நமக்கு ஏற்பட்ட கோபத்தினால், ஏற்பட்ட குற்ற உணர்ச்சிக்காக மனைவியை சமாதானம் செய்வதாக நினைத்துக் கொண்டு நான் செய்யும் அத்தனை வேலையும் உண்மையில் என்னை நானே சமாதனம் செய்து கொள்வதற்கே. இவை அனைத்தும் நம்மை மீறி வெளிப்பட்ட கோபத்திற்கு நமக்கு நாமே செய்து கொள்ளும் சமாதானமே ஆகும்.

நம்மை மீறி வெளிப்பட்ட கோபத்திற்கு நாம் சமாதானம் செய்ய வேண்டுமா?

உண்மையில் தேவையில்லை.

நம்மை மீறி வெளிப்பட்ட கோபத்தை நம்மை மீறி வெளிப்பட்டதாக எடுத்துக் கொண்டால் மட்டும் போதும்.

நம்மை மீறி வெளிப்பட்டதாக எடுத்துக் கொள்ளும் போது நமக்கு குற்ற உணர்ச்சி ஏற்படாது. அதற்காக நாம் எந்த சமாதனாமும் செய்ய தேவையில்லை. மொத்தமாக அந்த கோபம் நம்மை மீறி வெளிப்பட்ட ஒன்று தான் என்று புரிந்து கொண்டால் போதும் இங்கு குற்ற உணர்ச்சியே ஏற்பட்டாலும் அதுவும் நம்மை மீறி ஏற்பட்டதாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

நம்மை மீறி வெளிப்பட்ட கோபத்திற்கும், அதனால் ஏற்பட்ட குற்ற உணர்ச்சிக்கும் அதற்கு நாம் செய்யும் சமாதானமும் அந்த கோபத்திற்கு ஏதோ ஒரு வகையில் மறைமுக தூண்டுதலாகவே அமைந்து விடுகிறது. அப்படி மனதின் கவனத்திற்கு நம்மை மீறி ஏற்படும் கோபமோ, குற்ற உணர்ச்சியோ, அதற்கு நாம் செய்யும் சமாதானமோ எப்போது தெரிகிறதோ அப்போதே நம்மை மீறி நடந்ததாக எடுத்துக் கொண்டால் போதும் நாம் நிதானத்திற்கு வந்து விடுவோம்.

நம்மை மீறி வெளிப்பட்ட கோபம் நமக்கு தெரிந்த பிறகு குற்ற உணர்ச்சியோ, நியாப்படுத்துதலோ சமாதானமோ இல்லாத போது வெகு விரைவாக நாம் நிதானத்திற்கு வந்து விடுகிறோம். நாம் நிதானத்திற்கு வந்த பிறகு நாம் எப்படி செயல்பட வேண்டும் என்றும் யாரும் நமக்கு சொல்லித்தர தேவையில்லை. ஏனெனில் நமக்கே நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பது தெரியும்.

கோபம் ஏற்பட்டது நமக்கு தெரிந்த பிறகு கோபத்தை எதிர்த்து போராடாமல் அந்த சூழ்நிலைக்கு செயல் மூலமாக என்ன தேவையோ அதை செய்யத் தொடங்கினால் போதும். இப்படி நாம் நடைமுறையில் நடந்து கொண்டு வரும் போது காலப்போக்கில் நமது கோபப்படும் இயல்பே நமக்கே தெரியாமல் மாறி வருவதற்கான வாய்ப்பும் உள்ளது. நமக்கு ஏற்படும் கோபத்தை எப்படி எதிர்கொள்வது என்பது நடைமுறையில் நமக்கே நன்றாக தெரிந்து விடும்.

எந்த சூழ்நிலையிலும் நாம் நம்மை எதிர்த்து எந்த சண்டையும் போடத் தேவையில்லை. நமது கவனமின்றி சண்டை போட்டாலும் தவறில்லை. நம்மை மீறி நடந்து முடிந்தவை அனைத்தும் நம்மை மீறி நடந்தவையாக எடுத்துக் கொள்வதே சரியான தீர்வாக அமையும்.

“நடந்து முடிந்தவை அனைத்தும் நம்மை மீறி நடந்து முடிந்தவையாக எடுத்துக் கொள்வதே முழுமையான தீர்வாகும்.”

-V.A.P. **சரவணன்,** சேலம்.
செல்: 9994205880

## ஏற்காடு ஞானமுகாமில் **வேதாந்தம்** நூல் வெளியீட்டின் போது



ஐயா வெளியிட மதுரை வெங்கடேசன் பெற்றுக்கொள்கிறார்.

ஐயா வெளியிட திரு தாஸ் பெற்றுக்கொள்கிறார்.

ஐயா வெளியிட Divine Designer ரவிசங்கர் பெற்றுக்கொள்கிறார்.

# அழைப்பாய் ஓர் ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

இந்த உலகத்தில் சராசரி வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கும் நாம் அனைவருமே இந்த உலகத்தின் ஓர் அங்கத்தினர் தான். நமது யதார்த்த வாழ்வில் நாம் பலப் பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இந்த உலகமும் போட்டியும் பொறாமையும் நிறைந்து ஒரு போர்களமாகவே காட்சியளிக்கிறது. பிரச்சினை மிகுந்த இந்த யதார்த்த உலக வாழ்வில் இருந்து அமைதியை தேடியே பலர் ஆன்மிகத்திற்கு வருகிறார்கள்.

அப்படி வந்தவர்கள் ஆன்மிகப் பயிற்சிகளை மேற்கொள்ளும் போது அவர்களுக்கு ஆரம்ப கால கட்டத்தில் அற்புதமான அனுபவங்களும் ஆழ்ந்த அமைதியும் ஏற்படுகிறது. நாளடைவில் அதுவும் மறைந்த விட்ட நிலையில், இது மனதின் நிலையாமையில் ஏற்பட்டது என்பதை புரிந்து கொள்ளாமல் அற்புத அனுபவங்களையும் ஆழ்ந்த அமைதியையும் தேடி அலையும் நிலைக்கு தள்ளப்படுகிறார்கள்.

உலக வாழ்க்கையில் இருப்பவர்கள் சுகபோகத்தையும், இன்பத்தையும் தேடி அலைகிறார்கள்.

ஆன்மிக வாழ்க்கையில் இருப்பவர்கள் அற்புத அனுபவங்களை ஆழ்ந்த அமைதியையும் தேடி அலைகிறார்கள். இரண்டுமே இன்ப நாட்டத்தையே குறிக்கிறது. இதுவே நமது அனைத்து பிரச்சினைகளுக்கும் காரணம்.

ஆனால் உண்மையான ஆன்மிகம் என்பது நம் மனதை புரிந்து கொள்வதே. ஏனெனில் பிரச்சினை இருக்குமிடம் மனம் தான். விடுதலை தேவைப்படுவதும், மனதிலிருந்து மனதிற்கு விடுதலை தேவைப்படுகிறது. உலகத்தை புரிந்து கொள்ளும் மனம் தன்னையே புரிந்து கொள்ள வேண்டும். இதுவே தன்னை அறியும் ஞானம்.

இந்த ஞானப்புரிதலால் ஆன்மிகமும் உலகவியலும் ஒன்றிணைந்து விடுகிறது. உலகியலில் பிரச்சினையை நாம் எதிர்கொள்ளும் அணுகுமுறையில் மாற்றம் ஏற்பட்டு விடுகிறது. எல்லாப் பிரச்சினைகளையும் தீரத்துடன் எதிர்கொள்ளும் ஒரு மனத் தெளிவு ஏற்பட்டு விடுகிறது.

இந்த உயர்ந்த மெய் ஞானத்தை அனைவரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமையாக்கியவர் நமது பகவத் ஐயா அவர்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா நமக்கு கிடைத்திருப்பது, பல்வேறு பிரச்சினைகளில் சிக்கி தவித்துக் கொண்டிருக்கும் மனித குலத்திற்கு இயற்கையே கொடுத்த மாபெரும் கருணைக் கொடை.

மேலும் நாம் அனைவரும் எளிதாக அணுகி நம் சந்தேகங்களை கேட்டு தெளிவு பெறும் வகையில் ஐயா அவர்கள் எளிமையாக இருப்பதும் நமக்கு கிடைத்த மாபெரும் வாய்ப்பு.

நமக்கு கிடைத்த இந்த வாய்ப்பையும் ஞானத்தையும் தேடுதல் கொண்ட அனைவரும் பகிர்ந்து அவர்களும் பயன்பெற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் தொடங்கப்பட்டதுதான் நமது பகவத் மிஷன் ஆகும். இந்த பணியில் உங்களையும் இணைத்துக் கொள்ள அழைக்கின்றோம்.

மேலும் பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் ஒரு விண்ணப்பம்.

நாம் அனைவரும் தனித்தனியாக தனித்தனி ஊர்களில் வசித்து வருகிறோம். இருப்பினும் பகவத் பாதை குடும்பத்தை சேர்ந்த நாம் வருடத்தில் சில நாட்களாவது ஸ்ரீ பகவத் ஐயாவுடன் சேர்ந்து வாழ்ந்திடவும், புதியவர்களும் தங்கியிருந்து தெளிவு பெற வசதியாகவும் சேலம் திருவருட்சோலையில் தங்கும் வசதிகளை ஏற்படுத்தத் திட்டமிட்டுள்ளோம்.

இது பற்றி கலந்தாலோசனை செய்யவும், ஸ்ரீ பகவத் மிஷனின் புதிய செயல் திட்டங்கள் குறித்து முழுமையான முடிவுக்கு வருவது சம்பந்தமாக ஒரு கலந்தாலோசனை கூட்டம் 26/07/2015 ஞாயிற்றுக்கிழமை அன்று நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதற்கான அழைப்பு கடிதம் சீனியர் உறுப்பினர்களுக்கு அனுப்பப்பட்டுள்ளது.

அழைப்பு கடிதம் கிடைக்காதவர்கள், நமது பகவத் மிஷன் தொண்டில் ஆர்வமுள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் இதையே அழைப்புக் கடிதமாக ஏற்றுக்கொண்டு இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டு உங்களது மேலான ஆலோசனைகளையும் பங்களிப்பையும் வழங்குமாறு கேட்டுக் கொள்கிறோம். ஸ்ரீ பகவத் ஐயா அவர்களும் 25/07/2015 சனிக்கிழமை காலையே திருவருட்சோலைக்கு வர இருக்கிறார்கள்.

ஆகவே நமது அழைப்பினை ஏற்று 26/07/2015 ஞாயிற்றுக்கிழமை காலை 10 மணிமுதல் மாலை 5 மணி வரை நடக்கும் நமது குடும்ப நிர்வாகிகள் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தாங்கள் விரும்பினால் முதல் நாளே அதாவது 25/07/2015 அன்றே ஐயாவுடன் தங்கியிருந்து இந்த கூட்டத்தில் கலந்து கொள்ளலாம்.

தங்கள் வருகை நேரம் குறித்து முன்கூட்டியே தெரிவித்தால் தங்குமிடம் மற்றும் உணவு வசதி ஏற்பாடு செய்ய வசதியாக இருக்கும்.

அன்புடன்
ஆசிரியர். **K.S. ஜீவமணி**
செல் : 97891-65555

# ஸ்ரீ பகவத் ஐயாவின் நிகழ்ச்சிகள்

| நாள் | இடம் | பொருள் | ஒருங்கிணைப்பாளர் |
|---|---|---|---|
| 27-06-2015<br>சனிக்கிழமை<br>6:30 Pm. to<br>8:30 Pm. | **ஸ்ரீ பகவத் மிஷன் அம்பத்தூர் மையம்**<br>23/10, பழைய பரோடா வங்கி தெரு,<br>2வது மாடி, O.T. பஸ் ஸ்டேன்ட் அருகில்,<br>அம்பத்தூர், சென்னை-53. | **தன்னை அறியும் ஞானம்**<br>(Self Realization) | 9884097438<br>9381019473<br>9940534355 |
| 28-06-2015<br>ஞாயிற்க்கிழமை<br>6:00 Pm. to<br>8:00 Pm. | **ஸ்ரீனிவாச சாஸ்த்திரி ஹால்**<br>லக்ஸ் சர்ச் ரோடு,<br>மைலாப்பூர், சென்னை. | **தியானத்தை விடு**<br>**ஞானத்தை பெறு**<br>(Gnanam and Meditation) | 9884097438<br>9381019473<br>9940534355 |
| 03-07-2015<br>வெள்ளிக்கிழமை<br>6:00 Pm. to<br>8:00 Pm. | **சிவக்குமார்**<br># 7-A, First Main Road,<br>சாந்தி நிக்கேதன் காலனி, மடம்பாக்கம்,<br>சென்னை-126. | **ஞான விடுதலை**<br>**ஒரு கலந்துரையாடல்** | 9444899858<br>9445379817<br>9566039408 |
| 04-07-2015<br>சனிக்கிழமை<br>6:00 Pm. to<br>8:00 Pm. | **ரங்கா ஹால்**<br># 100, படேல் ரோடு,<br>ஸ்ரீநிவாச பிரியா ஹாஸ்பிடல் அருகில்,<br>பெரம்பூர், சென்னை-600 011. | **தியானத்தை விடு**<br>**ஞானத்தை பெறு**<br>(Gnanam and Meditation) | 9444441066<br>9940502239<br>9962708970 |
| 05-07-2015<br>ஞாயிற்க்கிழமை<br>6:00 Pm. to<br>8:00 Pm. | **சாஹாசரா ஹால்**<br># 15, 35வது குறுக்கு தெரு,<br>வேளச்சேரி, தாம்பரம் மெயின் ரோடு,<br>(பொன்கவிதா பழமுதிர்சோலை எதிர்புறம்)<br>விஜய நகர், வேளச்சேரி, சென்னை-42. | **தன்னை அறியும் ஞானம்**<br>(Self Realization) | 9551253636<br>9566039408<br>9444402986 |



எற்காடு ஞானமுகாமில் காலையில் ஐயாவுடன் வாக்கிங் சென்ற போது



எற்காடு ஞானமுகாமில் உணவு பரிமாறும் போது



## எண்ணங்களின் மாயை

ஜென் கதை

ஜென் குருமார்களில் புகழ் பெற்ற ஞானி ஒருவர் இருந்தார். அவரது கருத்துக்கள் ஜென் தத்துவங்களில் மிகவும் பிரபலமானவை. அவரிடம் பலரும் வருவதுண்டு. அவர்கள் அவரிடம் பலவற்றைப் பற்றியும் பேசுவார்கள். அவரது கருத்துக்களையும் கேட்டுச் செல்வார்கள்.

அவ்வூரில் ஓர் இசைக்கலைஞன் இருந்தான். அவனிடம் நல்ல இசைத்திறமை இருந்தது. கூடவே சில தீய பழக்கங்களும், அவனிடம் இருந்தன. தீய பழக்கங்களின் காரணமாகப் பலரையும் ஏமாற்றியிருந்தான் அவன்.

குருவிடம் வந்த ஒருவர் அவனது தீய பழக்கங்களை விவரித்தார். அவன் ஓர் ஏமாற்றுப் பேர்வழி. மோசடிக்காரன். தீயவன் எனப் பலவாறு அவனை வசையாடினார்.

அதை எல்லாம் கேட்டுக் கொண்டிருந்த குரு. "அவன் ஒரு அற்புதமான கலைஞனாயிற்றே! அவன் இசையை இன்றைக்கெல்லாம் கேட்டு மகிழ்ந்து கொண்டிருக்கலாமே" என்றார்.

அப்போது அங்கு வந்த மற்றவர், "ஆமாம், அவன் விரல் வித்தை காட்டும். சங்கீதமே அவனிடம் கைகட்டிச் சேவகம் புரியும்! " என்றார்.

அதைக் கேட்ட குரு "அப்படியா? அவன் ஒரு மோசமான ஏமாற்றுப் பேர்வழியாயிற்றே" என்றார்.

குறை சொன்னவர், புகழ்ந்தவர், என இருவருமே குழம்பினார்கள். என்ன இது இப்படி பேசினால், அப்படி சொல்கிறார். அந்தப் பக்கம் போனால் இந்தப் பக்கம் வருகிறார் என்று விழித்தனர்.

"ஏடாகூடமாகச் சொல்கிறீர்களே அவனைப் புகழ்கிறீர்களா? இகழ்கிறீர்களா?" என்று துணிந்து கேட்டார் அவர்களில் ஒருவர்.

"இரண்டுமே செய்யவில்லை. வெறும் சமநிலை செய்கிறேன். எந்த மனிதனையும் எடை போட நாம் யார்? ஒருவனை தீயவன் நல்லவன் என்று கூற உங்களிடம் என்ன அளவுகோல் இருக்கிறது? எதையும் ஒப்புக் கொள்வதோ, எதிர்ப்பதோ என் வேலையும் இல்லை. அதற்கான உரிமையும், என்னிடம் இல்லை. அவன் தீயவனும் அல்ல, உத்தமனும் அல்ல. அவன் அவனே! அவன் அவனாக இருக்கிறான். அவன் செயலை அவன் செய்கிறான். உங்கள் செயல் எதுவோ அதை நீங்கள் செய்யுங்கள்." என்றார்.

நடப்பவை அனைத்தும் நிகழ்வுகளே, அவை நல்லவை தீயவை என தீர்மானிப்பது அவரவர் எண்ணங்களே!



ஜென் கதை – "எண்ணங்களின் மாயை"

## சத்சங்கம்

சென்னையில் கீழ்கண்ட இடங்களில் பிரதி வாரம் ஞாயிற்றுக்கிழமை மாலை 6-00 - 7-30 மணி வரை ஐயாவின் கருத்துக்களில் ஈடுபாடு கொண்ட அன்பர்கள் கூடி சத்சங்கம் நடைபெற்றுக் கொண்டு வருகிறது. வாய்ப்புள்ள அன்பர்கள் கலந்து கொண்டு பயனடைய அழைக்கிறோம்.

**1. ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,**
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை- 600053.
செல்: 9884097438, 9381019479, 9444756744

**2. திரு. ரவிச்சந்திரன் இல்லம்**
24/35, கிருபசங்கரி தெரு,
வெஸ்ட் மாம்பலம், சென்னை- 600033.
செல்: 9444402986, 7299186793, 7299049789

**3. South Indian Buddhist Association,**
25/44, Paddy Field Road, Perambur, Chennai - 11.
(Adjacent to Perambur Bus Stand)
Cell: 9940502239, 9444441066, 9884063969

ஐயாவின் அனைத்து நூல்களும் இங்கு கிடைக்கும்.

**Registration Number of the News Paper TNTAM/2014/57698**
**Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555